ஸ்ரீ:

ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன் அருளிச்செய்த

# ஸ்ரீ காமாஸிகாஷ்டகம், ஸ்ரீ வேகாஸேது ஸ்தோத்ரம்



ஸ்ரீ. உப. வங்கிபுரம்

ஸ்ரீ. வாஸுதேவாசார்ய ஸ்வாமி

அநுக்ரஹித்த பதவுரை விசேஷ உரைகளுடன் கூடியவை.



20/4/1948

ஸ்ரீ ஸுதர்சந அச்சகம், சின்ன காஞ்சீபுரம்.

1947.

விலை அணா எட்டு]  [தபால் சார்ஜ் வேறு

ஸ்ரீ:

ஸ்ரீமதே ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீவேகாஸேதுஸ்தோத்ரம் ॥

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ ।
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி ॥

ஸ்ரீ:

ஸ்ரீமதே லக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ வேகாஸேது ஸ்தோத்ரம்.

வஹ்நிஸாந்நயஸம்பூதோ வாஸந்தேவோ யயாததி ।
வேகாஸேதுஸ்ஸ திவ்யாவஸ்தாம் கதந்தே தேசபாஷயா ॥

க்வாயம் மூததிமஜ்ஜீர ஹ்ரதயா: க்வாசாயதிவேத்ரக்ய
ஷ்தாஸாம் பாவமிரஞ்சிவணே வ்யததே விக்ஞஸதத்யவழ ।
மஜ்ஜாம் வேவிதந்தேஷ கக்கந்த மண: கிஞ்சாத ஸந்த்ஸ்ருதி
கிம் ஜிஹ்ரேதி ந சாவி ஸா ஸந்ததீ தோஷஜ்ஞதா விநதி ॥

ஸ்ரீ காஞ்சீ நகரில் உத்திரவேதியில் சதுர்முகனல் செய்யப்பட்ட அச்வமேத யாகத்தை, வேகவதீ யென்னும் நதியின் ப்ரவாஹத்திலிருந்து ஸம்ரக்ஷிக்கவேண்டுமென்னும் திருவுள்ளத்துடன் 'திருவெஃகா' என்னும் திருப்பதியில் 'ஸ்ரீ பகவான் அர்ச்சா ரூபியாகத் திருவவதரித்தான். புருஷகார பூதையான பிராட்டியுடன் திருவநந்தாழ்வானகிற திருப்பள்ளி மெத்தையில், ஆச்ரித பரதந்த்ரனய் யோக நித்ரை செய்துகொண்டிருக்கும் அந்தப் பகவானிடத்தில் தமக்குள்ள பக்தி பரீவாஹாத்மகமாக ஸ்ரீ தேசிகன் இந்த ஸ்தோத்ரத்தை அநுக்ரஹித்திருக்கிறர். "........ ஆதியயனுக்கருள் செய்தணையானன் தாதை யரவணையான் தான்" என்று அந்த நதியின் மத்யத்தில் அந்தப் பகவான் ப்ரஹ்மாவுக்கு அருள் செய்யத் திருவுள்ளம்பற்றி ஓர் அணையாக சயனித்துக் கொண்டிருக்கிற படியால் அவனுக்கு 'வேகாஸேது' என்னும் திருநாமம் நேர்ந்திருக்கிறது. "வேகாயா: ஸேது:— வேகாஸேது:" 'வேகவதியின் அணை' என்பது அச் சொல் தொடரின் பொருள். அவ்விதம் அவன் அவதரித்த வரலாறு ஸ்ரீ காமாஸிகாஷ்டக ஸ்தோத்ரத்தின் நான்காவது ச்லோக உரையின் கீழ் விவரிக்கப்பட்டிருக்கிறது.

இந்த எம்பெருமானுக்கு 'யதோக்தகாரீ' என்றும் மற்று மொரு திருநாமம் உண்டு. அந்தக் காரணத்தால் இந்த ஸ்தோத்ரம் 'யதோக்தகாரி ஸ்தோத்ரம்' என்றும் சொல்லப்படும். இந்த ஸ்தோத்ரத்தின் கடைசி ச்லோகத்தில், 'எந்த ஜநங்கள் இந்த வேகாஸேது ஸ்தோத்ரத்தை அநுஸந்தாநம் செய்கிறர்களோ, அவர்களுக்கு அந்தப் பகவான் அவர்கள் இடும் கட்டளைகளைச் செய்கிறர்' ['யதோக்தம் குருதே ஹரி:'] என்று ஸ்ரீ ஸ்வாமி இதை விவரித்திருக்கிறர். அதாவது: அந்தப் பகவான் அவ்வளவு ஆச்ரித பரதந்த்ரன் என்று சொல்லப் பட்டதாகிறது.

இது நிற்க: மற்றுமொரு ஐதிஹ்யமும் இந்தத் திருநாமம் வந்த காரணத்தை விளக்கும். காஞ்சீ நகரில் ஒரு ஸமயத்தில் பொய்கைக் கரையில், ஸ்ரீ திருமழிசையாழ்

வார் வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தை (பகவானை) ஸாக்ஷாத்கரித்துக்கொண்டு அங்கு யோகத்தில் எழுந்தருளியிருக்கையில், அப்பொழுது ஒரு கிழவி அவ்விடம் வந்து ஆழ்வாரை ஆச்ரயித்துப் பக்தியுடன் அவருக்கு ஶுச்ரூஷைகள் செய்துகொண்டிருந்தாள். யோகத்தில் எழுந்தருளியிருந்த ஆழ்வார் ஒரு நாள் திருக்கண்களை விழித்துப் பார்த்து, அக்கிழவியின் பக்த்யதிஶயத்தையும் கைங்கர்ய விஶேஷத்தையும் கண்டு போர உகந்து, அவளுடைய ப்ரார்த்தனையின் பேரில் அவளை ஸௌந்தர யுவதியாய் ஆகுமாறு குளிரக் கடாக்ஷித்தார். அக்கடாக்ஷ பலத்தின் அடியாக அவள் ஒரு ரூபவதியான யுவதியாக மாறிவிட்டாள். இந்த ஆச்சர்யத்தைக் கேட்ட அந்தத் தேசத்து அரசனான பல்லவராயன் தனக்கு நேர்ந்துள்ள கிழத்தனத்தைப் போக்கிக்கொள்ள விரும்பி, அவ்யுவதியை வரவழைத்து 'உனக்குப் போல் எனக்கும் யௌவனம் வரும்படி நீ செய்யவேண்டும்' என்று கேட்டான். அதற்கு அந்த யுவதி, 'திருமழிசையாழ்வாருக்குக் கணிகண்ணர் என்றொரு ஶிஷ்யர் இருக்கிறார்; அவர் உஞ்ச வ்ருத்தியால் ஜீவிக்கிறவர்; பகவத் பாகவத ப்ரதிபத்தியுள்ளவர்; அவரிடம் தங்களுடைய இஷ்டத்தைத் தெரிவித்தால் அவர் அதைப் பூர்த்தி செய்து வைக்கலாம்' என்று மறுமொழி சொல்லிப் போனாள். மறுநாள் அரசன் கணிகண்ணரை ஸந்தித்துத் தன் விருப்பத்தைத் தெரிவிக்க, கணிகண்ணர் அதற்கு இணங்காமல் மறுக்கவே, அரசன் சினந்து, அவரைத் தன் ராஜ்யத்தினின்று புறம் போகுமாறு கட்டளை பிறப்பித்தான். இச்செய்தியைக் கணிகண்ணர் ஸ்ரீ ஆழ்வாருக்குத் தெரிவிக்க, ஆழ்வாரும் தமது ஶிஷ்யரை விட்டுப் பிரிய மனமில்லாதவராய், தாமும் கூடப் புறப்பட உத்தேசித்துத் திருவெஃகா நாயனார் முன்பே எழுந்தருளி, அவனைப் பார்த்து,

"கணிகண்ணன் போகின்றான் காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்."

என்று விண்ணப்பம் செய்து கொண்டார். இதைக் கேட்ட எம்பெருமான் தனது பக்தனை விட்டுப் பிரியகில்லாது ஆழ்வார் விண்ணப்பம் பண்ணிக்கொண்ட விதமே அவர் பின்னே எழுந்தருளக் கச்சி நகரம் பாழடைந்தது. மறுநாள் அர்ச்சக பரிசாரகர்கள் வழக்கம்போல் திருவாராதனம் செய்வதற்கு ஸந்நிதிக்கு வந்து பார்க்க, பகவானைக் காணாமையால் மனம் திடுக்கிட்டு அச்செய்தியை அரசனிடம் தெரிவித்தார்கள். அரசன் தன் மந்த்ரிகளுடன் பகவானைப் பின் தொடர்ந்து ப்ரார்த்தித்தான். பகவானும் 'கணிகண்ணன் வந்தால் நாம் வருகிறோம்' என்று தனது வாத்ஸல்யம் தோன்ற நியமிக்க, அரசன் கணி கண்ணரிடம் போய்த் தான் அறியாது செய்த அபராதத்திற்கு க்ஷாபணம் செய்து கொண்டு' மீண்டும் நகர்க்கு எழுந்தருளவேண்டும்' என்று ப்ரார்த்தித்தான். கணிகண்ணன், அவன் செய்த பிழையைப் பொறுத்து மீண்டும் நகர்க்கு எழுந்தருள இசைந்து ஆழ்வாரை வேண்டிக்கொள்ள ஆழ்வாரும் மீண்டும் எழுந்தருளத் திருவுள்ளங் கொண்டு பகவானிடம் போய்,

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டும்—துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்ப்படுத்துக் கொள்."

என்று விண்ணப்பம் செய்து கொண்டார். எம்பெருமான், ஆழ்வாரது ப்ரார்த்தனைக் கிணங்கி மீண்டும் எழுந்தருள, நகரமும் முன்போல் ஶோபை யுடையதாயிற்று. இப்படி ஸ்ரீ ஆழ்வார் சொன்னவண்ணமே இந்தப் பகவான் செய்து வந்தனராதலால், இவர்க்கு 'யதோக்தகாரீ' என்று திருநாம மாயிற்று.

ஏகம் வேக³வதீமத்⁴யே ஹஸ்திஶைலே ச த்³ருஶ்யதே ।
உபாயப²லபா⁴வேந ஸ்வயம் வ்யக்தம் பரம் மஹ: ॥ 1.

---

'இப்படிப் பக்திஸாரரென்னும் திருநாமமுடைய திருமழிசை யாழ்வார் செய்த ப்ரார்த்தனையைத் தலைக்கட்டி வைத்ததால் மாத்ரம் இந்த எம்பெருமானுக்கு 'யதோக்த காரீ' என்னும் திருநாமம் வழங்கி வருகின்றதென்பதில்லை; அவன் ப்ரஹ்மாவின் யாகத்தை ஸம்ரக்ஷிப்பதற்காக வேகவதீ நதியை நிரோதம் செய்துகொண்டு அவ்விடத்தில் படுத்துக் கிடக்கிறான் என்னும் காரணத்தாலும் அவனுக்கு இத்திருநாமம் வழங்குகின்றது என்பது இந்த ஸ்தோத்ரத்திலிருந்து ஏற்படுகின்றதென்றும் சொல்லலாம்.

" அத²ஶாநந ஸைத்³தஜ்ஞ ஹொத்³வா
ஸரிதம் வேக³வதீம் ஸ நிருருந்து ।
ஸ ஹவாந் ஹஸ்திஶைலஸ்த²ம் யதோ²க்தகாரீ ॥ "

[நான்முகனுடைய வார்த்தையைக் கேட்டு வேகவதீ நதியை நிரோதம் பண்ணி, அந்த நான்முகனுடைய யஜ்ஞத்தை ஸம்ரக்ஷித்தா ரன்றோ இந்த யதோக்தகாரீ?] இத்யாதிகள் இப்படிச் சொல்வதற்கு நிபந்தநம்.

1. ஆச்ரிதர்களின் விஷயத்தில் 'உபாயமும் பகவான்; பலமும் பகவான்' என்பது நமது ஸித்தாந்தம் அதாவது: அவனே ப்ராபகன் [அடைவிக்கிறவன்], அவனே ப்ராப்யன் [அடையப்படுகிறவன்] என்று சொன்னதாயிற்று. லோகத்தில் உபாயம் வேறாகவும் பலம் வேறாகவும் காணப்படுகின்றனவே யொழிய, இரண்டு மொன்றாகக் காணப்படவில்லை. யாகத்தில் ஸ்வர்க்கம் முதலானவை ப்ராப்யம் [பலம்]; அதைக் காட்டிலும் வேறுபட்டிருக்கிற யாகமாகிற கர்மம் ப்ராபகம் [உபாயம்]; அப்படியன்று ப்ரக்ருத விஷயத்தில். 'மாமேகம் ஶரணம் வ்ரஜ' என்னும் சரம ச்லோக வாக்யத்திற்கு 'அவனே ப்ராப்யன் அவனே ப்ராபகன் என்று அநுஸந்தானம் செய்' என்பதே பொருளென்று ஸ்ரீ பாஷ்யகாரர் அநுக்ரஹித்திருக்கிறார். ['மாமேகமேவ காரணம் ப்ராப்யத்வம் ப்ராபகத்வம் உபாயம் அநுஸந்த⁴த்ஸ்வ' என்பது அந்தத் திவ்ய ஸூக்தி. கேவலம் ப்ராப்யமும் ப்ராபகமும் மாத்ரம் அவன் என்பதில்லை; அவனே கர்த்தா, அவனே உபாஸிக்கப்படுகிறவன், என்பது ஸ்ரீ பாஷ்யகாரருடைய திருவுள்ளம்'.] இந்த ஐக்யமே இந்த ச்லோகத்தின் விஷயம்.

சதுர்முக ப்ரஹ்மா ஒரு காலத்தில் பகவானைத் தர்ஶிக்க விரும்பி அச்வமேத யாகம் என்னும் ஒரு கர்மாவைச் செய்ய ஆரம்பித்தார். அதற்கு அநேக விக்நங்கள் ஏற்பட்டன. அவைகளை நிவர்த்திக்க அஶக்தராய், அவர் பகவானை ஶரண மடைந்தார். 'எனது இஷ்டத்தை ஸாதித்துக்கொள்ள எனக்கு ஶக்தியில்லை; என்னால் உத்தேசிக்கப்பட்ட யாகமாகிற கர்மமும் விக்நிதமாகிறது; எனக்கு உபாய ஸ்தாநத்திலிருந்து என்னுடைய இஷ்டத்தை ஸாதித்துக் கொடுக்கவேண்டும்' என்று ப்ரார்த்தித்தார். ஸ்ரீ பகவான் அதற்கு இணங்கி, வேகவதீ நதியின் மத்யத்தில் யதோக்தகாரியாக அவதரித்து யாக விக்நங்களை நிவர்த்தித்து [அதாவது: உபாய ஸ்தாநத்திலிருந்து] பிறகு ஹஸ்தி கிரியில் ஸ்ரீ தேவாதிராஜனை ஆவிர்ப்பவித்தான் [அதாவது: பலமாகவும் ஆனான்]. இவ்விடத்தில் திவ்யமங்கள விக்ரஹங்கள் இரண்டே யொழிய ஸ்வரூபம் ஒன்றே யாகையால், ஒரு தேஜஸ்ஸே இரண்டாக ஆவிர்ப்பவித்தது என்று ஐக்யம் பேசப்படுகிறது.

[illegible] ।
[illegible] ॥ 2.

இந்த ச்லோகத்தில் மற்று மொரு விதமாகச் சிலர் நிர்வாஹம் செய்வார்கள். 'இப்படி ஒருவனே ப்ராப்யனுகவும் ப்ராபகனுகவும் இருக்கிரு னென்னும் அர்த்தம் சாஸ்த்ரஜ்ஞர்களே அறியக் கூடும்; அது எல்லாருக்கும் ப்ரத்யக்ஷமாகத் தெரியவேண்டு மென்றே ஸ்ரீ பகவான் திருவெஃகாவில் யதோக்தகாரி ரூபேண உபாயமாகவும், மலையின் மீது தேவாதிராஜ ரூபேண பலமாகவும் திருவவதரித்திருக்கிருனே' என்பது தான் அந்தப் பொருள். ப்ரபத்தி யோகத்தின் ரஹஸ்யமும் இதுவே. நாம் மோக்ஷத்தை விரும்பி, அதற்கு உபாயமாக விதிக்கப்பட்டுள்ள பக்தியோகத்தைச் செய்ய ஸாமர்த்ய மற்றவர்களா யிருப்பதை உணர்ந்து, 'அந்த உபாய ஸ்தாநத்தில் நீ யிருந்து எங்களுடைய இஷ்டத்தை ஸாதித்துக் கொடுக்கவேண்டும்' என்று பகவானிடம் சரண மடையும் பக்ஷத்தில், அவன் தானே பக்தி யோக ஸ்தாநத்தில் நின்று நம்முடைய இஷ்டத்தை ஸாதித்துக் கொடுப்பான் என்பது தான் அந்த ரஹஸ்யம்.

[ப—ரை] ஸ்வயம் வ்யக்தம்- [கர்மம் முதலிய ஹேதுக்க ளின்றிக்கே] ஸ்வேச்சா மாத்ரத்தாலே ஆவிர்ப்பூதமாயும், வரம்— [மற்றை எல்லாவற்றைக் காட்டிலும்] உத்க்ருஷ்டமாயு மிருக்கும், ஏகம் மஹ:— ஒன்றாகவே யிருக்கும் தேஜோமயமான வஸ்துவானது, வேகவதீ மத்யே— வேகவதீ நதியின் நடுவிலும் [யதோக்தகாரி ரூபமாகவும்], ஹஸ்திசைலே ச— ஹஸ்திகிரியின் சிகரத்திலும் [தேவாதிராஜ ரூபமாகவும்], உபாயபலபாவேந— உபாயமாகவும் பலமாகவும், த்ருஶ்யதே- காணப் படுகிறது.

உபாய பலபாவேந— இதை யதா ஸங்க்யமாக, 'வேகவதீ மத்யே உபாய பாவேந, ஹஸ்திசைலே பலபாவேந' என்று பிரித்து முறையே பொருள் கொள்ளவேண்டும். 'உபாய பாவேந' என்பதற்கு, 'உபாயமாக இருக்கும் தன்மை' என்று பொருள் கொள்வதைக் காட்டிலும், 'உபாயாந்தர ஸ்தாநத்திலிருக்கும் ஸ்வபாவம்' என்று பொருள் கொள்வது உசிதமாகும் ஏனெனில்; அடுத்த ச்லோகத்தில், உபாயமாக இருக்கும் தன்மை பேசப்படுகிறது.

த்ருஶ்யதே—'ஸகல மனிதர்களுடைய கண்களுக்கும் விளங்கும்படி கிடக்கிருன்' என்பது கருத்து. இதனல் அவனுடைய ஸௌலப்யம் சொல்லப்பட்டது.

வரம்— கேவலம் ஸௌலப்ய மாத்ரம் இருப்பது போதாதாகையால், அவன் மிகவும் உத்க்ருஷ்டனுகவு மிருக்கிருன் என்று அவனுடைய பரத்வமும் சொல்லப்படுகின்றது. இரண்டும் இருப்பதன்றே நாம் ஆச்ரயிப்பதற்கு ஹேதுவாகும்?

2. ஆச்ரிதர்கள், 'நீர் எங்களால் ஸாதிக்கக் கூடாததான உபாயாந்தர ஸ்தாநத்தில் நிற்பது மாத்ரம் போதாது; அந்த உபாயமாக இருந்து எங்களை அக்கரைக்குக் கொண்டுபோய் விடவும் வேண்டும்' என்று ப்ரார்த்தித்தால் அப்படியே அவன் நயயிதாவாகவும் [வழி நடப்பிக்கிறவனுகவும்] ஆகிரு னென்பது இந்த ச்லோகத்தால் விளக்கப் படுகிறது. ப்ரக்ருதி மண்டலத்தில் இருக்கும் காலத்தில் மாயாந்வயத்தைப் போக்கி மத்யதமநீ த்வாரத்தை ப்ரகாசிப்பித்து, அதில் ப்ரவேசிப்பித்து, பிறகு அர்ச்சிராதி மார்க்கத்தில் அர்ச்சிராதி கணங்களை நியமிப்பதுடன், கூடத் தானும் ப்ரதாநனுக நின்று, பர்யங்க

பர்யந்தம் வழி நடத்திவைப்பதால் அவனை 'ஶமயிதா' வென்று சொல்ல ஆக்ஷேப முண்டோ! இதைத் தான் ப்ராபகத்வ மென்று சொல்வார்கள். இந்த ப்ராபகத்வத்தை ஸ்வாமி இந்த ச்லோகத்தால் விளக்குகிறார்.

இந்த ச்லோகத்தில் 'ச்லேஷன்' என்று சொல்லப்படும் ஶப்தாலங்காரத்தை அவலம்பித்து ஒரு த்ருஷ்டாந்தம் சொல்லப்படுகிறது: ஒரு நதியில் அக்கரைக்குப் போவதை உத்தேஶித்து, த்ருடமாகக் கட்டப்பட்டிருக்கும் ஓர் அணையானது ஜனங்களை எவ்வித ஆபத்து மின்றிக்கே அக்கரைக்குக் கொண்டுபோய்' விடுவதற்கு ஸுலபமான மார்க்கமாகிறது என்பது அந்தத்ருஷ்டாந்தம். அப்படியே ஸ்ரீ பகவானும் ஒரு த்ருடமான அணையாக விருந்துகொண்டு எவ்வித ஆபத்து மின்றிக்கே ஆச்ரிதர்களை அக்கரைக்குக்கொண்டு போய் விடுவதற்கு ஶக்தனாகிறான் என்பது தார்ஷ்டாந்திகம். த்ருஷ்டாந்தத்தில் வேகவதி நதியில் குறுக்காக ஶயநித்திருக்கும் ஸ்ரீ யதோக்தகாரி அணை; தார்ஷ்டாந்திகத்தில் ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தில் பெரியதொரு ஸேதுவாக (அணையாக) இருக்கும் ஸ்ரீ பகவானே அணை. முதல் அணையை அமைத்தவுடன் மலைபோல் வந்த ஸரஸ்வதீ ப்ரவாஹமும் அவ்விடத்திலேயே ஸ்தப்தமாக நின்று விட்டது. அப்படியே ஸகல சொற்களின் ப்ரவாஹமும் பகவானாகிற அணையை எட்டினவுடன் அவனிடத்திலேயே முடிந்துவிடுகின்றது. இது எப்படி யென்றால்: ஶரீரத்தைக் குறிக்கும் ஶப்தங்கள் அந்த ஶரீரத்துக்குள் இருக்கும் ஆத்மாவையும் குறிக்குமானால், அந்த ஆத்மாவுக்கும் ஆத்மாவாக ஒன்று இருக்கும் பக்ஷத்தில் அந்த ஶப்தங்கள் அந்த ஆத்மாவையும் குறிக்கவேண்டு மன்றோ? ஶாஸ்த்ரங்கள் ஸ்ரீ பகவானை ஆத்மாவுக்கும் ஆத்மா வென்று உத்கோஷிக்கிறபடியால், அந்த வெளிப்பட்ட சரீரத்தைச் சொல்லும் ஶப்தங்கள், இந்த அந்தராத்மாவாக இருக்கும் பகவானையும் குறிக்கும். இந்தப் பகவானுக்கும் உள்ளில் வேறொரு அந்தர்யாமி யிருந்தால், ஸர்வ ஶப்தங்களும் அந்த அந்தர்யாமி பர்யந்தம் எட்ட ப்ரஸங்கிக்கும். அப்படி அவனுக்கும் அந்தர்யாமியாக மற்றுமொரு ஆத்மா வொன்று இருக்கின்ற தென்று ஶாஸ்த்ரம் சொல்ல வில்லை யாகையால், எல்லா ஶப்தங்களும் இந்தப் பகவானைக் கிட்டினவுடன் அவனிடத்தில் முடிந்துவிடுகின்றன என்று சொல்லப் படுகின்றது. இது தான் 'எல்லாச் சொற்களும் பரமாத்மாவினிடத்தில் பர்யவஸிக்கின்றன' என்பதன் பொருள். இந்தக் காரணத்தால் ஸ்ரீ பகவானை 'ஸர்வ ஶப்த வாச்யன்' என்று வேதாந்திகள் வ்யவஹரிப்பார்கள். வேதாந்திகளின் வ்யவஹாரப்படி ஒவ்வொரு ஶப்தத்திற்கும் மூன்று குறிப்புக்கள் உண்டு, 'க்ருஷ்ணன்' என்று சொன்னால், அந்த ஶப்தத்தைக் கேட்ட வேதாந்தி, க்ருஷ்ணனுடைய தேஹத்தையும், அந்தத் தேஹத்தினுள் ஆத்மாவாக இருக்கும் ஜீவனையும், அந்த ஜீவனுக்குள் அந்தர்யாமியாக இருக்கும் பரமாத்மாவையும், ஆக மூன்றையும் குறிக்குமென்று அறிவான். இந்த மூன்றும் அந்த ஶப்தத்தின் முக்யமான அர்த்தங்களே என்பது வேதாந்திகளின் கொள்கை எந்த இடத்தில் என்ன அர்த்தத்தை அது குறிக்கின்ற தென்பதை ப்ரகரணங்களை கொண்டு நிர்ணயிப்பார்கள்.

[பதவுரை] ஸுஜுஷ்டஸ:— நாஶமற்ற, [வேகவதீ பக்ஷத்தில்: பலமான வெள்ளத்தாலும் உடைக்க முடியாத"; பகவத் பக்ஷத்தில் 'நித்யமான] ஸேது:— இந்த அணையானது, பாரம்— அக்கரைக்கு [வெளியிலிருக்கும் நித்ய விபூதிக்கு] ஶமயிதும்— கொண்டுபோய் விடுவதற்கு, ஶக்த:— ஶக்தமாகும்; யத்ர— எந்த அணையினிடத்தில், விஶ்ரம்பலாய— தடைப்படுவதற்கு யோக்யமாக இராமலிருக்கும் [மஹத்தான வேகத்துடன் ஓடிவரும்; லக்ஷணை முதலிய தோஷ மிராமல் முக்யார்த்தமாகவே அந்வயிக்கும்] ஸாரஸ்வதம் ஸ்ரோத:— ஸரஸ்வதீ ஸம்பந்தமான ப்ரவாஹமானது [ஸரஸ்வதீ நதி ப்ரவாஹமானது; சொற்களின் கூட்டமானது], விஶ்ராந்தி— முடிவை

ஜயதி ஜகதேகஸேது:
வேகவதீமத்யலக்ஷிதோ தேவ: ।
ப்ரஶமயதி ய: ப்ரஜாநாம்
ப்ரதிதாந் ஸம்ஸாரஜலதிகல்லோலாந் ॥ 3

---

அடைந்து விடுகின்றதோ [தடுக்கப்பட்டு அப்படியே தேங்கி நின்று விடுகின்றதோ: அவனைக் குறித்துவிட்டு அவனுக்கும் உள்ளில் வேறொரு வஸ்து இல்லாமையால் மற்ற ஒன்றையும் குறியாமல் அவனைக் குறிப்பதோடு முடிவுபெற்று அவ்விடத்திலேயே நின்று விடுகின்றதோ.]

—

விஶ்ரம்பஸ்ய– இதை 'ப்ரஸாத:' என்பதற்கு விசேஷணமாக எடுத்துக் கொண்டு உரை எழுதப்பட்டிருக்கிறது. இது இரண்டு பக்ஷத்துக்கும் ஒத்துவரும். 'விஶ்ரம்பம் விஶ்ராம்யேத்' என்று க்ரியா விசேஷணமாகவும் பகவத் பக்ஷத்தில் எடுத்துக் கொள்ளலாம், அப்பொழுது, 'எவ்வித ஸங்கோசமுமின்றிக்கே ப்ரதிபாதிக்கின்றது; என்பது பொருள்: எவ்வித க்லேசமுமின்றிக்கே ஸ்வஶக்தியாலேயே ப்ரதிபாதிக்கின்றது'

3. வேகவதியின் நடுவில் காணப்படும் அணை கேவலம் ஸம்ஸார ஸமுத்ரத்தின் அக்கரையாகிற மோக்ஷத்திற்குக் கொண்டுபோய் விடுகின்றது என்பது மாத்ர மில்லை; ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தின் அலைகள்போல் இருக்கும் துயரங்களையும் நாஶம் செய்கின்றது என்பது இந்த ச்லோகத்தாற் சொல்லப்படுகின்றது. கீழ் இரண்டு ச்லோகங்களால் பகவான் நமது இஷ்ட ப்ராப்திக்கு உபாயமாகிறான் என்பது விவரிக்கப் பட்டது. இந்த ச்லோகத்தால் அவன் அநிஷ்ட நிவர்த்தநத்தையும் செய்கிறான் என்பது விளக்கப்படுகின்றது.

[பதவுரை] வேகவதீமத்யலக்ஷித:-வேகவதியின் நடுவில் காணப்படும், தேவ:' பகவான், ஜகதேகஸேது:- ஸகல ஜந்துக்களுக்கும் முக்யமான அணையாக இருந்து கொண்டு, ஜயதி–விளங்குகிறான். ய:—எந்தப் பகவான், ப்ரஜாநாம்- ப்ரஜைகளின், ப்ரதிதாந்- ப்ரஸித்தங்களான. ஸம்ஸாரஜலதிகல்லோலாந்- ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தில் அலைகள் போலத் தென்படும் துயரங்க ளெல்லாவற்றையும், ப்ரஶமயதி- போக்கடிக்கிறானே.

ஜகதேகஸேது:- இவ்விடத்தில் 'ஏக' என்னும் சப்தத்திற்கு 'முக்யமான' என்பது பொருள். அதாவது–'ப்ரஸித்த அணைகளைக் காட்டிலும் விலக்ஷணமான' என்பது விவரிக்கப்பட்டதாகிறது. வைலக்ஷண்ய மென்னவென்றால்: ப்ரஸித்த அணைகள் அக்கரையைச் சேர்ப்பிக்க மாத்ரம் உபாயமாகும்; பகவானாகிற அணையோ வென்றால், அக்கரையைச் சேர்ப்பிப்பதோடு நடுவில் ஸம்ஸாரத்தில் ஸம்பவிக்கும் கஷ்டங்களையும் நிவர்த்திப்பிக்கும் என்பதுதான்.

ப்ரதிதாந்—ஸம்ஸாரத்தில் ஸம்பவிக்கும் க்லேசங்கள் ஸம்ஸாரிக ளெல்லாருக்கும் தெரிந்தவை யன்றோ? [காராக்ருஹம் பவமவி விஜ்ஞாய ஸஹேத க: ப்ரஜ்ஞ:] 'ஸம்ஸாரம் காரா க்ருஹம் போன்றது என்பதை உணர்ந்த எவன் அதை ஸஹித்திருப்பான்?' என்றன்றோ பெரியோர்கள் பேசி யிருக்கிறார்கள்?

அதர்வாநநஸவதஜஜ்ஞாதா
ஸ்ரிதம் வேகவதீமஸௌ நிருந்து ।
வரிவர்ஷ்யதி மங்களாநி வந்த்யாம்
பகவாந் பக்திமதாம் யதோக்தகாரீ ॥ 4.

விஹரந் ஜ மஜதஸி விஷ்ணுஸேது:
வேகவதாஸேதுவிவர்தஹேது: ।

---

4. கீழ் ச்லோகத்தில் ஸம்ஸார ப்ரஶமநமாகிற அநிஷ்ட நிவ்ருத்தி சொல்லப்பட்டது. இந்த ச்லோகத்தில் மோக்ஷ ஸாம்ராஜ்ய பர்யந்தமான இஷ்ட ப்ராப்தி சொல்லப்படுகின்றது. கீழ் ச்லோகத்தில் ‘ப்ரஜாநாம்’ என்று ஸாமாந்யமாக எல்லா ப்ரஜைகளுக்கும் சொல்லப்பட்ட பலம், அவனிடத்தில் பக்தியைச் செய்யும் பக்தர்களெல்லாருக்கும் ப்ராப்தமாகு மென்று விஶேஷிக்கப் படுகின்றதென்றும் சொல்லலாம்.

[ப—ரை.] அஸௌ பகவாந்— இந்தப் பகவான், வேகவதீம் ஸரிதம்— வேகவதீ என்னும் நதியை, நிருந்து— தகைந்து, (அதனால்) அதர்வாநந ஸவதஜ்ஞாதா—சதுர்முக ப்ரஹ்மாவின் யாகத்தை ஸம்ரக்ஷிக்கிறவனாயிருந்து கொண்டு, பக்திமதாம் வந்த்யாம்— [தன்னிடத்தில்] பக்தியைச் செய்யும் ப்ராணிகளுக்கு, யதோக்தகாரீ-சொன்ன வண்ணம் செய்கிறவனாய், மங்களாநி வரிவர்ஷ்யதி—ஸகல மங்களங்களையும் யதேஷ்டமாகக் கொடுக்கிறான்.

சதுர்முக ப்ரஹ்மாவின் ப்ரார்த்தனைக்கு இணங்கி, ‘நான் உன்னுடைய சொற்படி நடக்கிறேன்’ என்று சொல்லிக் கொள்பவனாய் யதோக்தகாரியாக ஆவிர்ப்பவித்தா னன்றோ? அதனாலேயே அவனுக்கு அந்த நாமதேயம் வந்ததென்பது ஸ்ரீ தேஶிகன் திருவுள்ளம் போல இந்த ச்லோகத்திலிருந்து தெரிகின்றது.

‘பக்திமதாம் வந்த்யாம்’— பக்தியைச் செய்யும் ப்ராணிகளுக்கு என்று ஸாமாந்யமாக அநுக்ரஹித்திருக்கிறபடியால், ‘பக்தியையுடைய ஸர்வ புருஷர்களுக்கும் அவர்களுடைய ஜந்மம் ஜ்ஞாநம் மற்றை அம்ஶங்கள், ஆகிய ஒன்றையும் பாராமலே அவன் மங்களங்களைச் செய்கிறான்’ என்பது ஏற்படுகின்றது. அந்தப் பக்தியும் ஒரு வ்யாஜமே. ‘சொன்ன வண்ணம் செய்கிறேன்’ என்று நிற்கும் அவனுடைய ஔதார்யம் எங்கே? தீந சேதநர்களான ஸம்ஸாரிகள் செய்யும் பக்தி எங்கே?

ஸவதந்த்ர:— இதற்கு யாகம் என்பது பொருள்.

5. ‘வந்த்யாம் வரிவர்ஷ்யதி’—ஸகல ப்ராணிகளுக்கும் ஸகல இஷ்டங்களையும் காங்க்ஷாதிகமாக வர்ஷிக்கிறான் என்று சொல்லப்பட்ட பலத்தை இந்த ச்லோகத்தால் தாமும் அபேக்ஷிக்கிறார். ஆனால், இவர் அபேக்ஷிக்கும் புருஷார்த்தம் ஐச்வர்ய மன்று; அக்ஷர பத மன்று; பரம பதமு மன்று; ஆனால், அது ஜ்ஞாந விஷயமே. அவன் கொடுக்கும் மங்களங்களுள் இதுவும் அந்தர்ப்பூதம். ப்ரஹ்மாவின் ப்ரார்த்தனை எப்படி ப்ரஹ்மாவிற்கு நிறைவேறிற்றோ, அப்படியே தமது ப்ரார்த்தனையும் நிறைவேறும் என்னும் நம்பிக்கையும் ஸ்வாமிக்கு உண்டு என்பதை உத்தரார்த்தம் விளக்குகின்றது. ஆனால், ப்ரஹ்மாவுக்குப் போல ஸாக்ஷாத் தர்ஶநம் தமக்கு ஏற்படாமற்போனாலும், அது மாநஸிக ஜ்ஞாநத்திற்கு விஷயமாகலா மென்பதைக் கருதி ‘ஜ மநஸி விஹரந்’ என்று ப்ரார்த்திக்கிறார்.

[ப—ரை] வேகவதாஸேதுவிவர்தஹேது:— வேகவதீ நதியின் தடைக்குக் காரணமான, விஷ்ணுஸேது:—விஷ்ணுவாகிற அணை, ஜ—என்னுடைய, மநஸி—மநஸ்ஸில், விஹரந்—தெளிவாய் ப்ரகாஶிக்கவேண்டும்;

அம்போஜயோநே: யதுபஜ்ஞமாஸீத்
அஹீநரக்ஷா ஹயமேததீக்ஷா ॥ 5.

ஸ்ரீஶோ(அ)பி தாத்ருக் ஹயமேதவேதி ... த்ராண:
ஸேது: ஸ ஜஜ்ஞே ... ஹ்ருஜ்ஜ: ।

அம்போஜயோநே:—ப்ரஹ்மாவினுடைய, ஹயமேததீக்ஷா—அச்வமேத ஸம்பந்த மான வ்ரதமானது, யதுபஜ்ஞம்—எந்தப் பகவானால் முதலில் அறியப்பட்ட தாய்க் கொண்டு, அஹீநரக்ஷா—விக்நமற்ற ரக்ஷணத்தை உடைத்தானதாக, ஆஸீத்—ஆயிற்றோ. பகவான் அந்தத் தீக்ஷையை முதல் முதலாகக் கடாக்ஷித்த தால் அந்தத் தீக்ஷைக்கு இருப்பு ஏற்பட்டதென்பது கருத்து. ['உபஜ்ஞா தம்' என்பதற்கு 'உபதேசமின்றிக்கே அறியப்பட்ட' என்பது பொருள். அதி லிருந்து கிடைத்த 'உபஜ்ஞா' என்பதற்கு, 'மற்றை எவ்விடத்திலிருந்தும் அடையப்படாத ஜ்ஞானம்' என்று பொருள் கிடைக்கிறது. 'பாணிநே: உபஜ்ஞா = பாணிந்யுபஜ்ஞம் க்ரந்த:' 'ப்ராசேதஸ: உபஜ்ஞா = ப்ராசேதஸோ பஜ்ஞம் ராமாயணம்' என்பவை போல, 'யஸ்ய உபஜ்ஞா = யதுபஜ்ஞம்' என்பது வடிக்கின்றது. ஆகையால், அம்போஜயோநேர் தீக்ஷா யதுபஜ்ஞம் = ப்ரஹ் மாவின் வ்ரதமானது எவனுடைய முதல் முதலான ஜ்ஞானத்திற்கு விஷயமாகி, என்று பொருள் கிடைக்கின்றது. இந்த 'உபஜ்ஞா' என்னும் சப்தம் தனியாக நிற்கும்பொழுது ஸ்த்ரீலிங்கம்; மற்றொரு சப்தத்துடன் ஸமஸ்தமாகச் சேர்க் கப்பட்டால், அது நபும்ஸகலிங்கமாக மாறி விடுகிறது என்பதும் கவனிக்கத் தக்கது.]

வேகாவரோதீ ஸேது:—'வேகவதியின் வேகத்தை அணையாக இருந்து தடுத்ததுபோல, என்னுடைய மநஸ்ஸிலுள்ள விஷய ஸம்பந்தமான வேகத்தையும் அந்த அணை தடுக்கும்' என்பது த்யோதிக்கப்படுகிறது.

மே—பகவத் ப்ரஸாதத்திற்குத் தம்மை அநர்ஹராகப் பாவித்துக்கொண்டு 'என்னு டைய' என்று ப்ரயோகம் செய்கிறார்.

விஹரது = விசேஷேண ஹரது— என் மநஸ்ஸை விட்டுப் பிரியாமல் அதிலேயே நித்ய வாஸம் பண்ணவேண்டுமென்பது ப்ரார்த்தனை. ஸ ஏவ ஹ்ருதயே வஸதி தேவோ(அ)த்ய: [அந்த:புர ஜனங்களுடன் குடியும் குடித்தனமுமாக என்னுடைய ஹ்ருதயத்தில் வந்திருக்கிறான்] என்றன்றோ மற்றோரிடத்தில் ஸ்ரீ ஸ்வாமியின் ப்ரார்த்தனை தென்படுகின்றது! நித்ய வாஸமன்றோ ஸ்வாமி அபேக்ஷிக்கும் புருஷார்த்தம்!

" அரவத் தமளியினோடு மழகியபாற் கடலோடும்
அரவிந்தப் பாவையுந்தானும் அகம்படி வந்துபுகுந்து
பரவைத் திரை பலமோதப் பள்ளிகொள்கின்ற பிரானை "

என்பது ஸ்ரீ பட்டர்பிரான் அருளிச் செயல்.

6. 'இவனை ஹ்ருதயத்தில் நித்யவாஸம் செய்யவேண்டுமென்று ப்ரார்த்திப்பது மிகவும் அநுபபந்நம். இவன் விடாக்ரேஸரனன்றோ? அப்படிப்பட்டவன் உம்முடைய மநஸ்ஸிலிருந்து ப்ராக்ருத விஷயங்களின் வேகத்தை நிவர்த்திக்க எப்படி யோக்யனு வான்!' என்று ஒரு சங்கையைச் செய்துகொண்டு அதற்கு ஸமாதாநத்தையும் அநுக்ர ஹிக்கிறார். 'அவன் ஸ்வயம் அப்படிப்பட்ட விடனாகி இருந்தாலும் தன்னை ஆச்ரயித்த வர்கள் விஷயத்தில் வைஷயிக மோஹத்தை நிவர்த்திக்க அவன் அர்ஹனே. எது நமக்கு அஸாத்யமாகத் தோன்றுகிறதோ அதை ஸாதிப்பதற்கு அவன் சக்தனே,

ஒ்ரு தரூாதிபஸஷீ ஸவஸஸஹுபணம் ஒ்ருஜா நாம்
ஸக்தா நாஹகஜஸிஹ யஸ்ய ஹதாஹதாஸி ॥ 6

அவன் அகடிதகடநா ஸமர்த்தன். இதற்கு நிதர்சநமாக அவனுடைய சேஷ்டித மொன்றைக் கூறுகிறேன் கேள். ஒரு காலத்தில் அவன் காஞ்சியில் தனது பக்தனுகிற பக்திஸாரர் பின் 'அவர் போனல் அவருடன் போகிறது; அவர் திரும்பினல் தானும் திரும்புகிறது' என்று தனது கதாகதங்களை நிறுத்தக்கூடாமல் அலைந்து கொண்டிருக்கையிலும், தனது பக்தரான ப்ரஜைகளுக்கு ஸம்ஸார மார்க்கத்தில் நேரும் கதாகதங்களைப் போக்கி அவர்களுக்கு சாந்தியைச் செய்கிறு னன்றே? தனது அலைச்சலை நிவர்த்தித்துக் கொள்ள அசக்தன் மற்றவர்களுடைய அலைச்சலை நிவர்த்திப்பிக்க சக்தனுக இருக்கிறானையால், அவன் ஸ்வயம் விடனுக இருக்கையிலும் மற்றவர்களுடைய மநஸ்ஸிலிருந்து அசுத்தியை விலக்கி அந்த மநஸ்ஸை சுத்தமாகச் செய்ய சக்தனே' என்பது ஸமாதாநம்.

அவன் உண்மையாக விடனு என்பது வேறெரு கேள்வி. ச்லேஷன் என்கிற அலங்காரத்தை அவலம்பித்து அவனை விடனுக வர்ணிக்கிறுர். இது ஒரு சமத்கார விசேஷம். (1) அவன் ப்ரஹ்மாவின் பத்நியாகிற ஸரஸ்வதியால் சுச்ருஷை செய்யப்பட்டு நிற்கிறுன். இது பரஸ்த்ரீ கமந மாகாதோ? (2) அந்த அக்ரமத்தையும் ஏகாந்தத்திற் செய்யவில்லை: தனது தர்ம பத்நியாகிற லக்ஷ்மீ ஸாந்நித்யத்திலேயே செய்கிறுன். தனது கீழே அநந்த னென்கிற ஒரு புமானும் இருக்கிறுன். இது லஜ்ஜை யற்றவன் செய்யும் ஸாஹஸ க்ருத்யமன்றே? (3) அவன் அநேக கோபிகளுடன் ஸம்போகம் செய்தவ னென்று புராணங்கள் சொல்லவில்லையா? (4) அவனுடைய பரிஜநங்களைப் பார்த்தால் அவர்களுள் ப்ரதாநன் ஒரு புஜங்கம். [புஜங்கம்' என்பதற்கு 'ஸர்ப்பம்' என்னும் பொருளுடன் 'விடன்' என்னும் பொருளும் உண்டு]. இவ்விதம் சொல்வதெல்லாம் கேவலம் சமத்கார உக்திகள். உண்மை என்ன வென்றுல்: ஸரஸ்வதி, தான் செய்த அபராதத்திற்கு க்ஷமை கொள்வதற் காகச் செய்யும் சுச்ருஷையைப் பரஸ்த்ரீயின் ஸம்போகம் போலவும், பகவான் சேஷ சயநத்தில் கண் வளர்ந்துகொண்டிருப்பதை விட ஸம்ஸர்க்கம் செய்வதுபோலவும், நந்தகோகுலத்தில் நடந்த ராஸக்ரீடை முதலிய சேஷ்டிதங்களை விடனுடைய க்ருத்யம் போலவும் வர்ணிக்கிறுர். இது ஒரு ரஸவத்தான பரிபாடி.—[இப்படியே

"பரநாரி யஸஸ்வஸயாநு வ ஜஸஙடீணாம்
பரநாவ நாஙுரஸவாம் ஸஙுஹொ பஸவ ।
ஸ்ரீசா நஶெஷஜ நவம் ஹ ஹணாய ஶெதெ
ரஂெஹ ஸஙஜஂ ஹஶயெந ஸ உஹாஸஙஜஂஹ: ॥"

என்று ந்யாஸ திலகத்தில் ஸ்ரீ ரங்கநாதனுடைய சயந வர்ணநம் இந்தப் பரிபாடியை அநுஸரித்துக் காணப்படுகிறது.]

[ப—ரை] ஸ்ரீமாநு—லக்ஷ்மியுடன் நித்யயோகம் பெற்றிருக்கிறவும் [பத்நியுடன் கூட இருக்கிறவும்], வி தாஉஹவய-தவரிஷ்ய-ராணா:—ப்ரஹ்மாவின் பத்நியாகிற ஸரஸ்வதியால் [அபராத நிவ்ருத்திக்காக] சுச்ருஷை செய்யப்பட்டவனுகவும் [ப்ரஹ்மாவின் பத்நியாகிற ஸரஸ்வதியால் ஆலிங்கநம் முதலிய உப்போகத்தால் உபசரிக்கப்பட்டவனுக்வும்], உஹாஹஜம:—கோகுலத்தில் வஸித்த காலத்தில் பெரிய விடனென்று பேசப்பட்டவனுகவும், [பெரிய விடனுகவும்] இருக்கும், ஸ:—அந்த யதோக்தகாரீ, ஹஜஙஹஶயநெ— சேஷ சயநத்தில் [விடர்கள் ஸஞ்சரிக்கும் இடத்தில்], ஶெதெ—சயநித்துக்கொண் டிருக்கிறுன். [விடர்கள் இருக்கும், இடத்திலேயே பொழுது போக்குகிறுன்.] [அப்படியிருந்தபோதிலும்] உஹ—இந்தக் காஞ்சீபுரத்தில், ஹக்தாநுகங்க:-பக்தன் [பக்திஸார யோகீ]

ஆுஶஶி தஹயலெயஷ்ஹ் ஹவஷ‌ம் வஷ்யொ நெ:
ஸ்ரீ தஜ நவர தஜ ம் ஶெஷஹொஜெ ஶயாநழ |
ஶரணஜ-வெ ம தாஷ ஶாக நிஸ்ஸெஷஷொஷம்
ஶ தஉவஉணிஸெ த-ம் ஶாஷ்தம் வெஹவ தஹா: || 7.

---

பின் அவன் போகுமிட மெல்லாம் அலைந்து கொண்டிருந்த, யஸ்ய—எவனுடைய, ம தாம தா நி—போவதும் வருவதுமான ஸஞ்சாரங்கள், ஜா நாழ—ப்ரஜைகளின், ஹவஸம் அரணழ—ஸம்ஸாரத்தில் உழல்வதை, ஆுதஹிஶுதி—[மறுபடியும் தலையெடுக்க இடங்கொடுக்காமல்] நிவர்த்திப்பிக்கின்றனவோ.

7. கீழ் ச்லோகத்தில், ஸம்ஸ்ருதி மார்க்கத்தில் உழன்று கொண்டிருக்கும் ஜநங்களின் யாதாயாதங்களைப் பகவான் போக்கடிக்கிறுரென்று அநுக்ரஹித்தார். இப்பொழுது அப்படிப்பட்ட ஶரண்யனை ஸ்வயமே ஶரணம் அடைகிறுர்.

[ப—ரை] வஷ்யொ நெ:—ப்ரஹ்மாவினுடைய, ஆுஶஶி தஹயலெயஷ்ஹ் வஷழ—அச்வமேத யாகத்துக்கு நேரும் போலேயிருந்த ஆபத்தை நிவர்த்திப்பித்தவனுகவும், ஸ்ரீ தஜ நவர தஜ ழ—[தன்னை] ஆச்ரிதர்களிடம் பராதீநதையைக் கொண்டாடுகிறவனுகவும், ஶெஷஹொஜெ ஶயாநழ—திருவநந்தாழ்வானுகிற படுக்கையில் ஶயநித்துக்கொண் டிருப்பவனுகவும், ஶாக நிஸ்ஸெஷஷொஷழ—ஒருவித தோஷத்தாலும் ஸ்பர்ஶிக்கப்படாதவனுகவும், வெஹவ தஹா: ஶாஷ்தம் ஶ தஉவஉணிஸெ த-ழ—வேகவதி என்னும் நதிக்கு இந்த்ர நீலப் பாறையால் கட்டப்பட்டிருக்கும் அணைபோல ஒரு ஶாச்வதமான அணையாகவும் இருக்குமவனை, [இவ்வித மெல்லா மிருக்கும் ஸ்ரீ யதோக்தகாரியை], ஶரணழ-உபாயமாக, உவ ம தாஷு:-பற்றுகிறோம்.

'ப்ரஹ்மாவின் யாகத்திற்கு நேரும்போல இருந்த விக்நத்தை நிவர்த்தித்தவன்' என்பதால், அவனுடைய ஆச்ரிதர்களின் அநிஷ்டங்களை நிவர்த்திக்கும் தன்மையும், 'ஆச்ரிதர்களிடம் பராதீநதையைக் கொண்டாடும்' என்பதால் அவனுடைய ஸௌலப்யமும், 'ஶாந்தங்களான தோஷங்களை உடைத்தாயிருக்கிறவன்' என்பதால் அவனுடைய பரம ஶக்தியும், 'இந்த்ரநீலப் பாறையால் கட்டப்பட்ட அணைபோல இருக்கிறுன்' என்பதால் அவன் ஒரு ஶாச்வதமான அவலம்பமாவான் என்பதும், இம்மாதிரி ஆச்ரயணோபயுக்த குணங்களால் நிறைந்தவனுக இருக்கிறபடியால் தாமும் ஆச்ரயிக்கலாமென்று திருவுள்ளம் பற்றி ஶரணம் புகுகிறுர். இந்தக் குணங்களெல்லாம் கீழே இருக்கும் ஆறு ச்லோகங்களால் விவரிக்கப்பட்ட குணங்களே.

ஶாக நிஸ்ஸெஷஷொஷழ—ப்ரதிஷேதிக்கப்படுமவை யெல்லாம் ப்ரஸக்தங்களாயிருத்தல் வேண்டும். இவ்விடத்தில் தோஷங்களை ப்ரதிஷேதிப்பதற்கு என்ன ப்ரஸக்தி என்று ஶங்கிக்கலாம். கிழ் ச்லோகத்தில் பகவானை விடாக்ரேஸரனுக ஒரு சமத்கார ரீதியை அவலம்பித்து வர்ணித்தாரன்றோ? அதைத் தத்ய மென்று யாராவது நினைத்து விடப்போகிறுர்களே என்று ஶங்கித்து அம்மாதிரியான தோஷ மொன்றும் அவனிடம் இல்லை யென்று இவ்விடத்தில் பரிஹரிக்கிறுர்.

ஸ்ரீ தஜ நவர தஜ ழ—இவ்விடத்தில் 'ஜந' ஶப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. இது, ஆச்ரிதன் எவனுக இருந்தாலும், தான், அவனுக்கும் பரதந்த்ரனுகிறுன் என்பதை வெளியிடுகின்றது. ஜாதி முதலான விஶேஷங்களைப் பாராமலிருக்கும் அஶேஷ லோக ஶரண்யனுக இருப்பவன் என்பது தோன்றுகிறது.

“ शरणमुपगतानां सोऽयमादेशकारी
शमयति परितापं सम्मुखः सर्वजन्तोः ।
शतगुणपरिणाहः सन्निधौ यस्य नित्यं
वरवितरणभूमा वारणाद्रीश्वरस्य ॥ 8.

काञ्चीहार्यं कलयति [illegible] विशिष्टैः
कृत्यानां निर्विशङ्कः कोऽपि कारुण्यराशिः ।

---

8. இந்த ச்லோகத்தில், ஸ்ரீ ஹஸ்திகிரி நாதனுகிற வரதனுடைய வரப்ரதான மாஹாத்ம்யமானது யதோக்தகாரியின் ஸாமீப்யத்தால் ஆயிரம் மடங்காக வளர்ந்து நிற்கின்றது என்று சொல்லப்படுகின்றது. இரண்டு எம்பெருமான்களுடைய ஸ்வரூபம் ஒன்றன்றோ? திவ்ய மங்கள விக்ரஹங்கள் மாத்ரம் பேதித்திருக்கின்றன. அப்படியிருக்க, ‘ஒருவருடைய பல ப்ரதத்வம் மற்றொருவருடைய ஸாந்நித்யத்தால் மஹிமை பெறுகின்றது என்று சொல்வது எப்படி உபபந்நமாகும்?’ என்று ஒரு ஶங்கை ஜநிக்கலாம். இரண்டு திருநாமங்களும் ஒன்றே என்பதில் ஆக்ஷேப மில்லை. ‘ஏகம் தைவதம்’ என்று இது முதல் ச்லோகத்திலே விளக்கப்பட்டிருக்கிறது ஆனால் ‘உபாயமநு ஸாதநம்’ என்று ஒருவருக்கு உபாயமாக இருக்கும் தன்மையும் மற்றொருவருக்குப் பலமாக இருக்கும் தன்மையும் அவ்விடத்திலேயே ப்ரஸ்தாவிக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு திவ்யாவதாரங்கள் இரண்டாக இருக்கின்றன என்பதை அவலம்பித்து அவர்களை வேறுபட்டவர்கள் போலப் பேசுகிறார். வெஃகாநாதன் ப்ரஹ்மாவால் ஶரணாகதி பண்ணப்பட்டவனாய்க் கொண்டு உபாயாந்தர ஸ்தானத்தில் நின்று யாக விக்நத்தை நிவர்த்தித்தான். அவனே பிந்தி ஹஸ்தி கிரியில் ஆவிர்ப்பூதனாய் வரதன் என்னும் திருநாமத்தை யுடைய பகவத் ஸந்தர்ஶநமாகிற பரம பலத்தை அளித்தான். இப்படி யதோக்தகாரியின் அவதாரம் பகவத் ஸந்தர்ஶநத்திற்கு ஹேதுவாக இருப்பதே இவ்விடத்திற் செய்யப்பட்டுள்ள உல்லேகத்திற்கு நிபந்தநம். வரதனை இதனாலேயே விட்டு யதோக்தகாரியை ஶரணாகதி செய்கிறா ரென்று சொல்லலாம். வரதனுக்குள்ள வர ப்ரதாந மஹிமை யதோக்தகாரியின் ஸாமீப்யத்தால் வளர்கின்றது என்பது ஒரு சாடுக்தி.

[ப—ரை] शरणमुपगतानाम्—ஶரணாகதியைப் பண்ணியிருக்குமவர்களுக் கெல்லாம் [அப்படிப்பட்ட ஸகல ப்ராணி வர்க்கத்திற்கும்], आदेशकारी—[அவர்கள் இடும்] கட்டளைகளைச் செய்கிறவனாயிருக்கும், सोऽयम्—அந்த யதோக்தகாரீ, सर्वजन्तोः—ஸகல ப்ராணிகளுக்கும் [ப்ரபந்நர்களெல்லாருக்கும்], सम्मुखः—அபிமுகனாக இருந்து கொண்டு, परितापम्—தாபம் எல்லாவற்றையும், शमयति—நிவர்த்திப்பிக்கிறான். यस्य—எந்த யதோக்தகாரியின், सन्निधौ—ஸாந்நித்யத்தில், वारणाद्रीश्वरस्य—ஹஸ்திகிரி நாதனுகிற வரதனுடைய, वरवितरणभूमा—வரங்கொடுக்கும் அதிஶயமானது, नित्यम्—ப்ரதி தினம், शतगुणपरिणाहः—நூறு மடங்கு அதிகமான முடிவையுடையதாக, [भवति—ஆகிறதோ].

9. இந்த ச்லோகத்தில் தாம் செய்த ஶரணாகதிக்குப் பகவான் இணங்கி, தம்முடைய ஹ்ருதயத்தில் ப்ரஸந்நனாகிவிட்டதாகப் பாவித்து, ‘ஜயதி’ என்று மங்களாஶாஸநம் செய்கிறார்.

புண்யாநாம் ந: பரிணதிரஸௌ பூஷயந் போகிசய்யாம்
ஸேதுர் ஜயதி வேகவத்யா விச்வரக்ஷைகஹேது: ॥ 9.

---

[ப—ரை] காஞ்சீபாக்யம்—காஞ்சீ நகருக்கு ஒரு பாக்யமாகவும், கமலாநயநஸித்தி:—பெரிய பிராட்டியாருடைய ஹ்ருதயத்திற்கு ஒரு ஸித்தியாகவும், கல்யாணாநாமவிகலநிதி:—ஸகல மங்களங்களுக்கும் குறைவற்ற நிதியாகவும், கோऽபி காருண்யராசி:—அநிர்வசநீயமான கருணைநிதியாகவும், ந: புண்யாநாம் பரிணதி:—நாம் செய்துள்ள புண்யங்களுடைய பக்வமான பலமாகவும், விச்வரக்ஷைகஹேது:—ஸகல ஜகத்தின் ரக்ஷணத்திற்கு ஒரே காரணமாகவுமிருக்கிற, அஸௌ வேகவத்யா: ஸேது:—வேகா நதிக்கு விஸ்தீர்ணமான அணையாகிற இந்த யதோக்தகாரீ, போகிசய்யாம் பூஷயந்—திருவநந்தாழ்வானுகிற தனது திருப்பள்ளி மெத்தையை அலங்கரித்துக்கொண்டு, ஜயதி—விளங்குகிறார்.

இந்த வர்ணனத்தைப் பார்த்தால், திருமேனியின் அழகை அவ்வளவாக வர்ணியாமல், கல்யாண குணங்களிலேயே ஈடுபட்டு ஸ்தோத்ரம் செய்வதாகத் தோன்றலாம். அப்படித் தோன்றின போதிலும், 'அஸௌ' என்று ப்ரயோகம் செய்திருப்பது, அந்தப் பகவான் அப்பொழுது ஸ்ரீஸ்வாமிக்கு ஸாக்ஷாத்தாக ஸேவை ஸாதித்ததாகவே சொல்லவேண்டும் ஏன் திருமேனியின் அழகையும் திவ்யாயுத பூஷணுதிகளையும் வர்ணிக்கவில்லையென்றுல், சில ஸமயங்களில் பக்தர்களைத் தமது குணங்களால் ஆகர்ஷிப்பதும், மற்றும் சில ஸமயங்களில் தமது திருமேனியின் அழகால் ஆகர்ஷிப்பதும் பகவானுடைய விசித்ரமான சேஷ்டிதங்கள்'. ஆதலால் இவ்விடத்தில் ஸ்ரீ தேசிகனுடைய திருவுள்ளம் அவனது கல்யாண குணங்களில் ஓடிவிட்டது போலும்.

காஞ்சீபாக்யம்—வரதனுடைய திருவவதாரத்திற்கு யதோக்தகாரி ஹேது. யதோக்தகாரீ உபாய:; வரதன் பலமென்று முதல் ச்லோகத்திலேயே அநுக்ரஹித்திருக்கிறார். ப்ரஹ்மாவின் யாகத்தை யதோக்தகாரியாயிருந்து நிறைவேற்றினதாலன்றோ, காஞ்சீ நகரத்தில் வரதனுடைய ஆவிர்ப்பாவம் ஏற்பட்டது. ஆகையால் காஞ்சீ நகரத்தின் பாக்யம் யதோக்தகாரியே. அன்றிக்கே: ரமணீயங்களான கணக்கற்ற ஸ்தலங்களிருக்க, காஞ்சிக்கு அவன் எழுந்தருளி அணைபோல ஸ்திர சயநத்தை அவ்விடத்திலே திருவுள்ளம் பற்றினுனென்பது காஞ்சீ நகரத்தினுடையவும் அதில் வஸிக்கும் ஜநங்களுடையவும் பாக்யமே· அன்றிக்கே, காஞ்சீ நகருக்கு இவனுடைய ஸாந்நித்யம் ஒரு சோபா விசேஷத்தைக் கொடுக்கிறதென்றும் சொல்லலாம். 'ஸ்ரீஹஸ்திகிரி ...' என்பதுபோல.

கமல............ஸித்தி:—காஞ்சியின் பாக்யமென்று அநுக்ரஹித்தவுடன், இவன் பெரிய பிராட்டியாரின் பாக்ய ஸித்தியன்றே என்பது ஸ்ம்ருதிக்கு வந்தது. பெரிய பிராட்டிக்குப் பாக்ய மென்று சொல்வதற்குக் காரண மென்னவென்றுல், தீநர்களான க்ருஹிகளுக்கு மோக்ஷம் எப்படி யென்று பிராட்டி சிந்தித்திருக்க, அகிஞ்சநர்களான ப்ரபந்நர்களின் விஷயத்தில் தாமே உபாயாந்தர ஸ்தாநத்திலிருந்து அவர்களை யெல்லாம் கரையேற்றுகிறேமென்று யதோக்தகாரியாக அவதரித்ததாலே, பிராட்டியின் சிந்தை நிவ்ருத்தியடைந்ததன்றே? என்றும் சிலர் சொல்வார்கள். சிந்தா க்ரஸ்தர்களின் சிந்தை விலகி அவர்களின் மநோரதம் நிறைவேறுவதே பெரியதொரு ஸித்தி.

𑌵𑍇𑌗𑌾𑌸𑍇𑌤𑍋𑌰𑌿𑌦𑌂 𑌸𑍍𑌤𑍋𑌤𑍍𑌰𑌂 𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑍇𑌶𑍇𑌨 𑌨𑌿𑌰𑍍𑌮𑌿𑌤𑌮𑍍 ।
𑌯𑍇 𑌪𑌠𑌨𑍍𑌤𑌿 𑌜𑌨𑌾𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌹𑌰𑌿𑌃 ॥ 10

𑌇𑌤𑌿 𑌕𑌵𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑌸𑌿𑌂𑌹𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌸𑍍𑌯 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑌿𑌷𑍁 𑌵𑍇𑌗𑌾𑌸𑍇𑌤𑍁𑌸𑍍𑌤𑍋𑌤𑍍𑌰𑌂 𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑍍.

𑌕𑌵𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑌸𑌿𑌂𑌹𑌾𑌯 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌶𑌾𑌲𑌿𑌨𑍇 ।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑍇𑌶𑌾𑌯 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌗𑍁𑌰𑌵𑍇 𑌨𑌮𑌃 ॥

---

𑌅𑌵𑌿𑌕𑌲𑌃—என்பதற்கு, 'குறைவற்ற' என்பது பொருள்.

𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌰𑌾𑌶𑌿𑌃—ப்ரஹ்மாவின் யாகம் ப்ரதிபத்த மாகும்போல் இருந்த பொழுது, பகவான் அவருக்குத் தனது அளவற்ற கருணையைக் காண்பித்தா னென்பது ப்ரஸ்துத மாகையால், அந்தக் காருண்யத்தை நினைத்து இவ்விடத்தில் '𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌰𑌾𑌶𑌿𑌃' என்று பேசப்படுகிறது.

𑌨𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌪𑌰𑌿𑌣𑌤𑌿𑌃—வரதனை அவதரித்ததை நினைத்து, 'நம்முடைய பாக்ய மன்றோ இது!' என்று ஸாதிக்கிறார். நமது கண்களுக்கு அளவற்ற ஆநந்தத்தைக் கொடுக்கின்ற அவனுடைய ஸேவை கிடைப்ப தென்பது பெரியதொரு பாக்யமே.

𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑌕𑍍𑌷𑍈𑌕𑌹𑍇𑌤𑍁𑌃—ஜகத் முழுவதையும் ரக்ஷிப்பதற்கு அவனே ஶக்தன். '𑌵𑌿𑌶𑍍𑌵𑌭𑍋𑌗𑍈𑌕𑌹𑍇𑌤𑍁𑌃' என்று ஒரு பாடாந்தரம் உண்டு. அப்பொழுது 'ஸகல ஜநங்களுடைய போகத்திற்கும் அவனே முக்ய காரணம்' என்பது பொருள்.

𑌭𑍋𑌗𑌿𑌶𑌯𑍍𑌯𑌾𑌂 𑌭𑍂𑌷𑌯𑌨𑍍—பகவான் ஶேஷ ஶயநத்தில் எழுந்தருளியிருப்பது, அந்த ஶயநத்திற்கே ஒரு விஶேஷித்த அலங்காரத்தைச் செய்கிறது. அப்படியே தமது சேதஸ்ஸிலும் ஸேவை ஸாதிப்பதாகத் தெரிகிறது. இவ்விடத்தில் எம்பெருமான் பிராட்டியின் பாக்ய ஸித்தி யென்றும், மற்றோரிடத்தில் பிராட்டி எம்பெருமானுடைய திவ்ய ஸம்பத் தென்றும் [𑌸𑌂𑌪𑌦𑍀𑌵𑍍𑌯𑌾 𑌉𑌭𑌯𑌵𑌿𑌜𑌯𑌿𑌨𑌃] சொல்வது நமது ஸித்தாந்தத்தை வெளியிடுகின்றது. ஸகல கல்யாண குணங்களும் இரண்டு திருநாமங்களுக்கு முண்டென்பதும், சிற்சில குணங்கள் ஒவ்வொருவரிடத்தில் பலோபதாயமாக இராம லிருப்பதே வாசியென்பதும் நமது ஸித்தாந்த மன்றோ?

10. ஆரம்பித்த ஸ்தோத்ரத்தைத் தமது திருநாமத்தை நிர்த்தேஶித்து நிகமநம் செய்கிறார். இந்த ஸ்தோத்ரத்தை ஜபிக்கிறவர்களுக்கு ஸ்ரீ ஶரண்யன் சொன்ன வண்ணம் செய்வன் என்பது இந்த ஸ்தோத்ரத்தை ஜபிப்பதன் பலம்.

[ப—ரை.] 𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑍇𑌶𑍇𑌨—வேங்கடேசன் என்னும் திருநாமமுடைய ஸ்ரீ நிகமாந்த மஹா தேஶிகனால், 𑌨𑌿𑌰𑍍𑌮𑌿𑌤𑌮𑍍—ரசனை செய்யப்பட்ட, 𑌇𑌦𑌮𑍍—இந்த, 𑌵𑍇𑌗𑌾𑌸𑍇𑌤𑍋𑌃 𑌸𑍍𑌤𑍋𑌤𑍍𑌰𑌮𑍍—யதோக்தகாரியின் ஸ்தோத்ரத்தை, 𑌯𑍇 𑌜𑌨𑌾𑌃—எந்த ஜநங்கள், 𑌪𑌠𑌨𑍍𑌤𑌿—படிக்கிறார்களோ, 𑌤𑍇𑌷𑌾𑌮𑍍—அவர்களுக்கு. 𑌹𑌰𑌿𑌃—அந்தப் பகவான், 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇—சொன்னவண்ணம் செய்கிறான்.

ப⁴ஜந்தி—'படிக்கிறார்களோ' என்று ஸாமாந்யமாகச் சொல்லப்பட்டிருந்தபோதி லும், 'ப்ரதி தி³நம் எவர்கள் அநுஸந்திக்கிறார்களோ' என்பதும் விவக்ஷிதம்.

யதோ²க்தம் — ஸ்வப⁴க்த—பாகவதர்கள் என்ன செய்யச் சொல்லுகிறார்களோ அதை அவன் செய்கிறான் அவர்கள் சொல்லவேண்டு மென்பது கூட இல்லை; அவர்கள் எதை மநஸ்ஸால் ஸங்கல்பிக்கிறார்களோ, அதை நிறைவேற்றி விடுகிறான் என்பதும் தாத்பர்யம். 'யதோ²க்தம்'—'சொன்னவண்ணம்' என்று மாத்ரம் சொல்லப்படிருக்கிறது. 'இன்னார் சொல்லும் ப்ரகாரம்' என்று சொல்லவில்லை. ஆகையால், 'தான் சொல்லி யிருக்கும் வண்ணமே' என்றும் பொருள் கொள்ளலாம். அவன் சொல்லியிருப்பது என்ன வென்றால். 'ஸர்வபாபேப்⁴யோ மோக்ஷயிஷ்யாமி' [ஸகல பாபங்களிலிருந்தும் விடு வித்துவிடுகிறேன்] என்பதுதான். இது அவன் ப்ரதிஜ்ஞை அன்றோ? அந்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றி மோக்ஷ பர்யந்த ஐச்வர்யத்தைக் கொடுத்து நம்மை க்ருதார்த்தர்களாகச் செய் வன் என்பது தாத்பர்ய மென்றும் சொல்லலாம். 'யதோ²க்தகாரீ யதோ²க்தம் கரோதி— பக்தர்கள் சொல்லும் வண்ணம் ஸகலத்தையும் செய்யும் ஸ்வபாவ முள்ள அவன், தான் சொன்னவண்ணமும் நடப்பன் என்பது அந்வயம்

ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகனால் அநுக்ரஹிக்கப்பட்ட

**ஸ்ரீ வேகாஸேது ஸ்தோத்ர**

வ்யாக்யாநம் ஸம்பூர்ணம்.

---